உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.



# சிதம்பர-அன்னதானமான்மியம்.

இஃது,

கோயில்



அ - இராமசாமிச்சுவாமியவர்களால்,



மிமோரியல் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

நந்தன௵ வைகாசிமீ

1892

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சிதம்பர - அன்னதானமான்மியம்.



திருச்சிற்றம்பலம்.

தேவாரம்.

## திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்.

கற்றுங்கெரியோம்பிக்கலியைவாராமே
செற்றார்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
முற்றாவெண்டிங்கண்முதல்வன்பாதமே
பற்றாநின்றாரைப்பற்றாபாவமே.

## திருநாவுக்கரசுசுவாமிகள்.

அன்னம்பாலிக்குந்தில்லைச்சிற்றம்பலம்
பொன்னம்பாலிக்குமேலுமிப்பூமிசை
யென்னம்பாலிக்குமாறுகண்டின்புற
வின்னம்பாலிக்குமோவிப்பிறவியே.

## சுந்தரமூர்த்திசுவாமிகள்.

மடித்தாடுமடிமைக்க ணன்றியேமனனேநீ வாழுநாளுந், தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கிலிடும்போது தடுத்தாட்கொள்வான், கடுத்தாடுங்கரதலத்திற் றமருகமுமெரியகலுங்கரியபாம்பும், பிடித்தாடிப்புலியூர்ச்சிற்றம்பலத்தெம்பெருமானைப்பெற்றாமன்றே.

## மாணிக்கவாசகசுவாமிகள் - திருவாசகம்.

உடையாளுன்றனடுவிருக்குமுடையாணடுவுணீயிருத்தி
யடியேனடுவுளிருவீருமிருப்பதானாலடியேனுன்
னடியார்நடுவுளிருக்குமருளைப்புரியாய்பொன்னம்பலத்தெம்
முடியாமுதலேயென்கருத்துமுடியும்வண்ணமுன்னின்றே.

திருநாவுக்கரசுசுவாமிகள் "அன்னம்பாலிக்குந் தில்லைச் சிற்றம்பலம்" என்று திருவாய்மலர்ந்தருளி இருப்பதாலும், காசி சேது முதலிய மற்றைய தலங்களி லன்னதானஞ்செய்வதிலும், பூலோக கயிலாசமாகிய இந்தச் சிதம்பரக்ஷேத்திரத்தில் மற்றையர்களுக்கு அன்னதானஞ் செய்விப்பதினும், சிரவண மனன நிதித்தியாசனங்க ளனுஷ்டித்துவருகிற சிவனடியார்களுக்கும், சிறந்தபெரியோர்களுக்கும், திருவமுது செய்விப்பதே அளவிறந்தகோடிமடங்கு அதிகபலனாகும்;—

ஆனபடியா லிவ்வித விசேஷங்களுடைய இந்தக்ஷேத்திரத்திற் சுயமேநடப்பிக்க விருப்பங்கொண்ட வித்தியாதானத்தோடு, இதற்கேதுவாயும், சாற்றுகின்ற தானங்களுக்குட் சிறந்ததாயு முள்ள அன்னதானமும், நடத்த விருப்பங்கொண்டு:—

உலகெலாமுணர்ந்து ஓதிதற்கரிய சிவபெருமானருளிய வேதாகமபுராண இதிகாசங்களாலும் உண்மை நாயன்மார்களாலும் விராட்புருடனுடைய இருதயகமலமெனவும், புண்டரீகபுரம், வியாக்கிரபுரம், தில்லைவனம் - திருக்கோயிலெனவும், வியந்து - ஓதப்பெற்றதாயும் அப்பெருமான் ஆன்மாக்களுய்யுமாறு சிவகாமசுந்தரியம்மையார் கண்டுகளிக்கப் பஞ்சகிருத்திய பரமானந்ததாண்டவம்புரிந்தருளுதற்கு முக்கியஸ்தானமாயும் விளங்குகின்ற;—

சிதம்பரக்ஷேத்திரத்திலே ஆலயத்துக்கு அபிமுகமாயுள்ள ஆயிகுளத்திக்குத் தென்கரையிலே ஸ்ரீசாம்பநடேசப்பெருமான் சம்பூரணகிருபையாலும், சகலதனவான்களுடைய பேருதவியாலும், ரூபாய் பதினாயிரத்திக்கு நம்மால் நூதனமாகவமைக்கப்பட்ட மடாலயத்திலேசென்றகராஹ

சித்திரைமீ - சவ - ஸ்ரீசாம்பநடேசப்பெருமானுக்கு நட ந்த கும்பாபிஷேகம் தரிசித்தற்குவந்த சாதுக்களுக்கும், மற்றையர்களுக்கும் சாங்கோபசாங்கமாய் அன்னதானம் நடப்பித்ததுமல்லாமல், அதற்குமுன் சென்ற விக்ருதிவரு தைமீ - உசுஉ - ஸ்திரவாரமுந் திரயோதசிதிதியும் உத்தி ராடநக்ஷத்திரமுங் கூடிய சுபதினத்திலே, உதயாதி அரை நாழிகைக்குமேல் - ருவ - நாழிகைக்குள்ளாகக் கும்பலக் கினத்தில் மடாலயப்பிரவேசமாகிய அந்நாள்தொடங்கி இந் நாளளவும் இயன்றமட்டும் அன்னதானம் நடந்துவருகின் றது; ஆயினும், மென்மேலும் அபிவிருத்தியாக அன்னதா னம் நடப்பிக்க விருப்பங்கொண்டிருப்பதுமல்லாமல் எமக் குப் பிற்காலத்தும், சாங்கோபசாங்கமாய் நடந்துவருதற் கேதுவாக, அசையாப்பொருளாகிய நிலம்வாங்குதற்கு, நகரத்தாரை உத்தேசித்தே வந்திருக்கின்றனம். ஆ கையால், நீங்களனைவோரும், யாம் உத்தேசித்த மேற்கண் ட தருமத்தை எப்போதும் சாங்கோபசாங்கமாய் நடந்து வரும்படி நமது நடேசப்பெருமான் கிருபையால் நடத்து வீர்களென்றே நம்புகின்றனம்.

ஆனால், தானங்களெல்லாவற்றினுள்ளுஞ் சிறந்தது அ ன்னதானமே. அதிலும், மற்றையர்களுக்குச் செய்விப்பதினு ஞ் சிவனடியார்களுக்கும் பெரியோர்களுக்குஞ் செய்விப்ப தே அளவிறந்தகோடிமடங்கு அதிகபலனாகும்.

தானங்களெல்லாவற்றினுள்ளும் அன்னதானமே
சிறந்ததானமென்பதற்குப் பிரமாணம்.

சிவதருமோத்திரம்.

அன்ன தான மறைந்தவற்று ளதிக பலமே யருந்தின
னுக், கின்னல் கெடுக்கு மப்பொழுதே யின்பந் தனையு மிசை

விக்கு, மன்னு முட்டலுள் வலியதனுன் மாறில் பொருளே யஃ
ததனு, லென்னி லுவமை யிதற்கில்லை மண்ணின் கண்ணே
யெவ்விடத்தும்.

அன்ன மதனி லாமுதிர மதனுற் றசையா மதனுலே
மன்னு மலின சுக்கிலமு மலின மதனுற் கருவாகு
மன்ன மின்றே லுயிர்வாழு மாக்கை விளைய வழிந்தகலு
மன்ன மதுவே யுடறன்னை யாக்கு நிறுத்து மழித்திடுமே.

உற்ருன் பசியைக் கனகத்தா லொளிசேர்மணியா லொ
ண்டொடியான், மற்று முளநல் வளனுலு மாற்ற வலனே
வலன்வயினுட், கெர்ப்பந் தனக்கும் பாலனுக்குங் கிளர்ந்த
தருணன் றனக்குமுட, லொற்க * முடைய விருத்தனுக்கு
முண்டோ நிலையோ தனமொழித்தே.

தேவர் முனிவர் தானவருந் தினைப்ப ருணவைத் திதிவி
ரும்பி, யாவருணவை விரும்பாதா ரிடர்சே ருடலுண் முந்நூ
ற்றெட், டோவா நோயுண் டவற்றுள்ளும் பசிநோய் கொ
டிய தினதனுக், காவாவென்றே யருளாள னருத்து மருந்
தோ தனமன்றே.

உற்ற பசிநோய்க் கனமருந்தை யுதவு வாரு மிலராகி
லற்ற துயிரு மவ்வுடலுக் கன்ன மளிப்பா ரவருண்டேற்
பெற்ற துயிரு மவ்வுடலம் பெறுமவ் வுயிருந் தருமாதி
சொற்றை யீவா னுயிரீவான் றரும முதலுந் துயக்கறவே.

அன்ன மாக்கை தனையாக்கு மதனு லறமுன் னுளவாகு
மன்ன மதனு லனைத்தினுக்கு மதிக காரண மதனுலே
யன்ன மதனுக் கொப்பான காரண மில்லை யாயுங்கா
லன்னையான காரணமும் புதல்வர்க் குளதோ வகலிடத்தே.

* ஒற்கம் என்றது - மெலிவு.

அன்ன மதனை யுலகனைத்து மாக்கு மயனென் றறையு மறை, மன்னு முலகந் தனைக்காக்கு மாய னெனவு மதித்து ணாக்குஞ், சொன்ன வுலக மனைத்தினையுந் துடைக்கு மரனு மெனச்சொல்லு, மின்ன முறையா லெவற்றினுக்கு மிஃதே முதலென் றெண்ணுகவே.

உதக மதனை யுயிரெல்லா முண்ண விரும்பு மதனாலே
யுதகந் தனக்கு மொப்பான பொருள்வே றில்லை யுலகத்து
ளுதக மன்ன மெனுமிரண்டு முயிரை யோம்பு மதனாலே
யுதக மன்ன மெனுமிரண்டு முதவிற் பரம பலமுளதே.

## திருவிளையாடற்புராணம்.

பொருப்பினுட்டலைமையெய்தும்பொன்னெடுங்குடுமிமேரு
தருக்களிற்றலைமைசாருந்தண்ணறுந்தெய்வதாரு
விருப்புறுவேள்விதம்முண்மேம்படும்புரவிமேத
மருட்படுதானந்தம்முள்விழுமிதாமன்னதானம்.

## சற்சீலமுனிவர்பாடல்.

சாற்றியதானங்கட்குளன்னதானமேதலைமையாகும்
போற்றிடுந்தவசிகட்குட்பொருவிலாஞானியாகும்
ஆற்றிடும்நூல்களுக்குளத்தொய்தந்தலைமையாகும்
நோற்றிடுந்தலங்கட்குணேக்குறிற்றில்லையாகும்.

அருமறையறைந்தவண்ணமருமையாஞ்சிதம்பரத்திற்
றருவினைப்போலேயன்னதானமேசெய்யவேண்டும்
பெருமையாமெத்தலத்தும்பெருமையாமித்தலத்தி
லொருபிடியமுதளித்தாலொழிவிலாப்பலனுடைத்தாம்.

அத்தினுமடியார்க்கன்னமளிப்பதேயதிகமாகு
மத்தினும்பெரியோர்க்கன்னமளிப்பதேயதிகமாகு

மெத்தலத்தேனுமன்னமெலையறவளித்தபேறு
மித்தலத்தளித்தவன்னதானத்திக்கிணையேயில்லை.

நீதிசாரம்.

கரிபரியாயிரங்கள் கனத்தகோதானம்பூமி
பரிவொடுரசிதஞ்சொர்ன பாத்திரம்பண்பாமென்று
மிருகுலமொத்தகன்னி கோடிதானிந்திட்டாலு
மரிதிதுவென்றேயன்ன தானமேயதிகமாகும்.

கோயிலூர்புராணம்.

சாற்றுமத் தலமன்ன தானஞ்செய் வதற்கிடமாம்
போற்றுமத் தலம்போலெப் புவனத்து மில்லையெனத்
தூற்றுவ தெவன்செய்வ தணுத்துணை யாயிடினு
மாற்றவு மகமேரு வாகுமத் தலத்தறிதி.

தன்னநல் கினும்பலமே தங்கிடு மெனவோர்ந்து
பன்னரும் பெருஞ்செல்வப் பற்றுடை யவர்சிறிதா
மன்னநல் குதல்கூடா தமைந்ததம் பொருளளவைக்
குன்னரு மன்னதானம் வீசிட லுத்தமமாம்.

பொருளில ராயமெடுத் தாயினு மதிபுரித
லருளிய லரிதாகி லத்தலந் தனைச்சார்ந்து
தெருண்மிக விடுவார்பாற் சிந்தைவைத் தினிதுண்டு
மருளறவாழ்ந்திடுக மற்றதும் பயன்படுமே.

எத்தலங் களினுமன்ன மிடுதலி னுற்பயனு
மத்தலத் தேற்பதினும் பெரும்பய னடையுமெனி
னுத்தம தலமிதுபோ லெங்குள துணர்வேந்தே
சித்தமெண் ணியவெல்லாஞ் சேர்தர லாமிதனுல்.

அத்தல மடைந்தி யாவ னெனினுமோர் க்வள வன்ன
மெத்திய வன்பி னீவா னக்கினிட் டோம மேலு

மொத்தபன் மகமுஞ் செய்த பலனெலா முறுவா னுண்மை
வித்தக வரச வையம் வேண்டுவ திலையிக் கூற்றில்.
[னு
பொருவிலத் தலத்தி லன்னங்கொடுப்பவன் புசிப்போனென்
மிருவரும் வயங்கு மென்றாழ் மண்டலத் தினைப்பேதித்துத்
திருவம ரொளியிற் சென்று சத்திய வுலகஞ் சேர்ந்து
பருவர லொழிந்து பன்னாள் வாழ்குவார் பாராள்வேந்தே.

இன்னுமத் தலத்தி லன்ன தானமியா ரியற்று வாரோ
வன்னவர் நுகரும் போக மனைத்துமா தரவிற் றுய்த்துப்
பன்னரும் புவனநாதன் பரவருள் வழங்கப் பெற்றுப்
பின்னர்வான் பிரம ஞானம் பெறுவரீ துண்மை மாதோ.

---

பிராமணப்பிள்ளை

## அன்னதானப்பலனையறிந்தகதை.

——:o:——

பதினோராநாளிரவில் மந்திரிகுமாரன் உண்டு ஆடை யாபரண லங்கிர்தனுகிப் பரிமளமிகுந்த நறுமலர்மாலைசூடி தாம்பூலந்தரித்துப்பள்ளியறைசேர்ந்தான் இராசகுமாரத்தி களில் மூத்தாள் ஸ்நானஞ்செய்து உண்டு கலவைச்சாந்த ணிந்து ஆடையாபரண லங்கிர்தளாகிப் பரிமளமிகுந்த நறு மலர்மாலைசூடி வழக்கப்படி வருகிறதுபோலப் பள்ளியறை க்குவந்து சற்றுநேரம் வீணையைப்பாடிக் காமமீறிக் கண வனையணையவந்தாள் மந்திரிகுமாரன்கண்டு இவள்காதலைக் கதையாற் றணிக்கக்கருதி ஓ பெண்கள்நாயகமே நானொரு சிறியகதை சொல்லுகிறேன் அது முடிந்தவுடன் இருவருங் கூடலாமென்று சொல்ல இராசகுமாரத்தி அக்கருத்துக் கிசைய மந்திரிகுமாரன் சொல்லுகிறான் கேளும் பெண்கட்

கரசியே கலிங்கதேசமென்றொரு பட்டணமுண்டு அதிலே ஒரு அக்கிராரமுண்டு அவ்வக்கிராரத்திலே ஒருபிராமண னுண்டு அவனந்தக் கிராமத்திலே உபாதானமெடுத்துச் சீவ னஞ்செய்துவந்தான் அந்தக்கிராமத்திலே இருக்கிறவர்கள் அந்தப்பிராமணனுக்குத் தங்கள் சக்தியானுசாரம் பொரு ளுதவிசெய்து ஒருபிராமணக் கன்னிகையை மணந்தொ டுத்து உபாதானத்தில்வரும் அமுதுபடியரிசியை தன்னு டைய சீவனத்துக்குவைத்துச் சுகித்துவந்தார்கள் சிலநாட் சென்றபின்பு சுவாமியின் அனுக்கிரகத்தால் ஒரு புத்திர னளவன்பிறந்தான் அப்புத்திரனுக்குத் தாய்தந்தையர் தங்க ளுடைய சக்தியானுசாரம் வேதவிதிப்படி பிராமணச்சடங்கு களை நிறைவேற்றி ஐந்துவயதானபின்பு பள்ளிக்குவைத் தார்கள் அப்புத்திரன் பள்ளியைச்சேர்ந்து நாலுவேதம் ஆறுசாஸ்திர மறுபத்துநாலு கலைக்கியான மனுவிக்கியான முதலியவற்றையோதினன் பதினொருவயதாயிற்று அக்கால த்திற் பிதா இறந்துவிட்டார் பிதாவுக்குச் செய்யவேண்டிய கருமங்களையெல்லாம் நிறைவேற்றித் தானு மாதாவுமாக வீட்டிலிருந்தனர் மாதா தினந்தினங்கூலிக்குக்குத்திஅதிற்கி டைத்த அமுதுபடியைக் கொண்டுவந்து சமயல்செய்துமுன் னம் ஒருவேதியனுக்கு அன்னமிட்டு மிச்சமிருந்ததைத் தா னுந் தன்புத்திரனுமாகப் பொசித்துக் காலத்தைக் கழித்து வந்தாள் இப்படி சிலகாலஞ் சென்றபின்பு ஒருநாள் இந்தப் பிராமணப்பிள்ளை அன்னைகொண்டிருக்கிற விரதத்தை நினை த்துக்கொண்டு சற்றுநேரம்யோசித்துத் தனக்கொன்றுந் தோன்றுமற்போகவே தாயிடத்துவந்து வணங்கி ஓ அம்ம ணி நமதிஸ்திதியோ கூலிக்குக்குத்தி அதில்வரும் அமுதுபடி யல்லது வேறு சீவனமில்லை அப்படியிருக்க நீங்கள் தினம்

ஒரு வேதியனுக்கு அன்னமிடாமல் பொசிக்கிறதில்லை இந்த விரதத்தினால்வரும் பயனென்னவென்று வினவ? தாய் குஞ் சிரிப்புற்று அப்பாபுத்திரா பெரியோர்களால் கூறப்பட்டிருக்கிறது சோடசதானம் அவற்றிற் சிறந்தது அன்னதானமும் நிதானமுமென்றுசொல்லுவார்கள் அதில் அன்னதானம் அதிகதானமென்று எங்கள் தாதைமூதாதையாற்சொல்லக்கேட்டிருப்பேன் ஆதலால் நான்அன்னமிடுகிறதை ஒரு விரதமாகக்கொண்டிருக்கிறேனென்று கூற புத்திரன் வணங்கி ஓ அம்மணி அந்த அன்னதானத்தின் பலனென்ன அதனை எனக்கு விளங்க வுரைக்கவேண்டுமென்று வினவ? தாய் சொல்லுகிறாள் அப்பா நான் எங்கள் பெரியோர்கள் சொன்னதைக் கேட்டதேயன்றி அன்னதானத்தின் பலன் இன்னதென்று கேட்டதுமில்லை அவர்கள் சொன்னதுமில்லை மேலும் அந்த அன்னதானத்தின்பலன் சாஸ்திரங்களாற் கூறத்தக்கது;-இவ்வுலகத்துக்குக் காரணனாகிய் பரமசிவனுக்கேதெரியு மாதலால் அவனைத் தரிசித்துக்கேட்டால் விளங்குமென்று கூற புத்திரன்கேட்டுத் தாயைவணங்கி ஓ அம்மணி நான் பரமசிவத்தைக்கண்டு அன்னதானத்தின் பலனைக்கேட்டு வருகிறேன் கொஞ்சங் கட்டமுதுகட்டிக்கொடுவென்றுவினவ? தாய் அவ்வாறு கட்டமுது கட்டிக்கொடுக்க அதனை வாங்கிக்கொண்டு தாயைப்பணிந்து விடைபெற்று அந்த அக்கிராரத்தைக்கடந்து நாட்டைவிட்டு காட்டிற் புகுந்து அனேகதூரஞ்சென்றான் அக்காடோ மனிதசஞ்சாரமில்லாது கரடி புலி யானைகள் நிறைந்திருக்கின்ற அவ்வனத்தில் நெடுந்தூரஞ் செல்லும்போது சூரியனஸ்தமிக்கிற வேளையாக யிருந்தது அந்தவேளையில் அக்காட்டில் இருக்கிறவேடன் கண்டு ஓஓ யாரோ ஒருமனிதன் செல்லுகிறா

ளவனையுற்று நோக்கினற் சிறுவனுகவும் பிராமணத்திரு மேனியாகவும் இருக்கிறது இன்னந் தூரஞ்சென்றால் பொழுதஸ்தமானமாகுங் காடோ பெருங்காடு மிருகதொந்தரை அதிகம் இன்றிராப்பொழுதுக்குச் சிறுவனை நம்மிடத்தில் வைத்திருந்தால் சூரியனுதயமானவுடன் கருத்துக்கிசைந்தபடி நடக்கட்டுமென்று கருதி அப்பிராமணப்பிள்ளையை வழிமறித்து ஓ ஐயா, சூரியனோ அஸ்தமானமாகிற தருணம் இன்னும் போகப்போகக்காடு அதிகமிருகதொந்தரவாயிருக்குமாதலால் இன்றையராப்பொழுதையிங்குதங்கிவிட்டுஅதன்பின்பு உமது கருத்தின்படி செல்லுமென்று கூறப் பிராமணப்பிள்ளை அக்கருத்துக்கிசைந்தான் வேடன் அப்பிராமணப்பிள்ளையை யழைத்துப்போய்த் தன் பரணையின் மேல் வைத்துக்கொண்டு மனைவியை அழைத்து அடிபெண்ணே இவராரோ பிராமணர் பொழுதஸ்தமிக்கிறவேளை தன்னந்தனியே காட்டிற் செல்லுகிறது தகுதியல்லவென்று நினைத்து இன்றிராப்பொழுதுக்கு வைத்திருக்கவேண்டுமென்று கருதி யழைத்தவந்தேன் நாம் இருவரும் பொசிக்குந் தேனுந்தினைமாவுங் கொஞ்சம் நெருக்கிக்கொடுத்தால் அவர் பசியுமாறிப்போகிறது நீபடுக்கிற இடத்திலும் நான் படுக்கிறவிடத்திலும் கிஞ்சிற்றிடம் பங்கிட்டுக் கொடுப்போமாகில் அதிற் படுத்திருப்பாரென்று கூற வேடன் மனைவி கடுஞ்சினமடைந்து போபோ நான் இடங்கொடுக்கேன் என் பங்கு தேனையுந் தினைமாவையுங் கொடுக்கேனென்றாள் வேடன் பார்த்து அவ்வேதியனுக்கு தன்பங்கு இடத்திற் கொஞ்சமிடமுந் தன்பங்கு தேனிலுந் தினைமாவிலுங் கொஞ்சங்கொடுத்துத் தன்பக்கத்திற்படுக்கவைத்துக்கொண்டு தானும் படுத்துக்கொண்டான் வேடன் தூக்கத்திற்புரண்டு பூமியில்

விழுந்துவிட்டான் ஒரு மிருகம் அவனைக் கொன்று தின்று விட்டது சூரியோதயமானவுடன் வேதியன் எழுந்து பார்த்தான் வேடனைக்காணே மெங்குசென்றுனேவென்று கருதிப் பரணைவிட்டிறங்கி நடந்தான் வேடன்மனைவி புருஷனைக்காணுதவளாகி ஓஓ நமது கணவன் பிராமணனுக்கு இடங்கொடுத்து நமது புருஷன் பூமியில்விழுந்து மிருகத்துக்கிரையாஞனென் றுணர்ந்து அத்தக்ஷணந் தானும் பரணைவிட்டிறங்கிச் சினத்தோடு ஓடி வந்து நடந்துபோகிற வேதியனைக்கைப்பிடித்துக்கொண்டு ஓபிராமணு உனக்கு இடங்கொடுத்து என் கணவன் மிருகத்துக்கிரையாயினஞகையாலென் கணவனைக் கொடுத்துப்போவென்றனள் பிராமணன்அடடா இதென்னஅநியாயம் வேடனிறந்தால் நம்மிடத்துவந்து இறந்தவனைக்கொடுவென்று வினவுகிருள் இதுவென்ன அநியாயமென்று மதித்து அடிவேடுவச்சி உன்னையானறிந்து வரவில்லை உன் கணவன் என்னை வலிய அழைத்துவந்து அவன் பொசிப்பிலும் அவிடத்திலுங் கொஞ்சம்கொடுத்து அருகிற் படுத்திருந்தான் சூரியன் உதயமானவுடன் நானவனைக் கண்டிலன் போடிபோவென்று கையைத்தட்டி திமிரிப் பிடுங்கிக்கொண்டு காடு மலை வனம் வனந்திரங்களெல்லாங் கடந்து ஒரு ஊரில்வந்தான் அவ்வூரில் ஒரு பிராமணன் அவன் நூறு ஏர்ச் சமுசாரி அந்தச்சமுசாரிக்கு ஒருநாளைக்கி ஆயிரக் கலந்தானியம் வரவு அவ்வளவு வரவிருந்தாலு மவ்வூர் ஏரி மராமத்துக்கே சரியாயிருக்கும் ஏனென்றுல் நித்தமவ்வேரியை மராமத்துச் செய்துவருகிறது உதயமாஞல் அவ்வேரி முன்போ லுடைத்துக்கொள்ளுகிறது அதஞல் ஆள்களுந் தானியங்களுஞ் செலவாகிறது அந்தப்பிராமணன் வீட்டுக்கு இந்தப் பிராமணன்போஞ னவ்வேதியன் இப்பிராமணப்

பிள்ளையைப்பார்த்து நீயார் எங்கிருக்கிறது என்ன காரியார்த்தமாகவந்தீர் எங்குசெல்லுகிறீரென்று வினவினன் தன்வரலாற்றைச்சொல்லி அன்னதானப்பலனை பரமசிவனுலறிந்துகொள்ளப்போகிறேனென்று கூற வேதியன்கேட்டு மகிழ்ந்து அப்பிள்ளைக்கு நல்ல விருந்தளித்து ஒ ஐயா நீர் பரமசிவனைக்கண்டு உன்குறை நிறைவேறினபின்பு என்னூர் ஏரி தினம் உடைத்துக்கொண்டுபோகிறது அது என்னகாரணமோ தெரியவில்லை அதனையுந் தெரிந்துவாருமென்று வேண்ட வேதியர் அக்கருத்துக்கிசைந்து விடைபெற்றவ்வூரைவிட்டு காட்டிற்புகுந்து செல்லுகிறான். அவ்வழியில் ஒரு முடவன்கைகால் இல்லாதவனுகிப்பசியால் மிகவும் வருத்தமுற்றிருக்கிற அவ்வேதியனைப்பார்த்து ஒ ஐயா நீரெங்குசெல்லுகிறீரென வேதியன் அன்னதானப்பலனைப் பரமசிவனுலறிந்துகொள்ளச் செல்லுகிறேனென முடவன் சொல்லுகிறான் ஒ ஐயா, நான் கைகாலில்லாதவனுகிப் பசியால் வெய்யலிற்படும் புழுப்போலே வருந்துகிறகாரண மெனக்குத் தெரியவில்லை இக்காரணத்தையுங் கேட்டறிந்து வாருமென்றுசொல்ல வேதியன் அக்கருத்துக்கிசைந்து விடைபெற்றுச் சிலதூரஞ்சென்றான் அங்கொரு நாகம் புத்தினின்றும்வெளியில்வர சக்தியில்லாமலுங் கண்தெரியாமலும் பசியினுலுங் கனவருத்தப்பட்டிருக்கிறது இவ்வேதியனைக்கண்டு ஒ ஐயரே, நீரெங்கு செல்லுகிறீரென்றுவினவ? வேதியன் அன்னதானப்பலனை அறிய பரமசிவனைக் காணப்போகிறேனென்ன நாகம் எனக்குக் கண்தெரியவில்லை பசிக்கு இரைதேடுவோமென்றால் இரையின்மேல் விருப்பமுமில்லை புத்தைவிட்டுவெளியில்வர நினைத்தால் வருவதற்குச் சக்தியில்லை அது எனக்கு சந்தேகமாயிருக்கின்றது அதனை விளங்கக்கேட்டுவாருமென்

று சொல்லிற்று அதனையுங்கேட்டுக்கொண்டு அதைக்கடந்து சிலதூரஞ்சென்றான் அங்கொரு மாமரம் குலுங்கப்பழுத்து ஒருவருக்கும் உதவியில்லா திருப்பதையுந் தன்னிடத்திற் பறவை விலங்குமனிதர் ஒருவருமணுகாதிருப்பதையும் நோக்கி வருத்தமுற்றிருக்கிறது இந்தப் பிராமணப்பிள்ளையைப் பார்த்து ஓ பிராமணா நீ எங்குசெல்லுகிறீரென்று சொல்லப் பிராமணப் பிள்ளை தன் கருத்தைச்சொல்ல மாமரம் நான் குலுங்கப் பழுத்தும் என்பழமொருவர்க்கும் உபயோகமாகவில்லை என்னிடத்துப்பறவைகளும் விலங்குகளும் வந்தடைகிறதில்லை இது எனக்கு தீராச்சந்தேகமாயிருக்கிறது இதனைக்கேட்டுத் தெரிந்துவாருமென்றுசொல்ல அதனையுங் கேட்டுக்கொண்டு அங்கிருந்து சிலதூரஞ் சென்று அங்குதோன்றிய பெரிய ஒரு மலையைக்கண்டு இதுதான் தவத்துக்குநல்ல உபயோகமானவிடமென்றுகருதி அங்குதவநிலையொன்றியற்ற விருப்பங்கொண்டு அந்நிலைசேர்ந்து ஐம்[illegible]டக்கி அருமையான தவத்தி[illegible] ஒருவ[illegible]மாய்த் தவத்திலிருக்கவே தபாக்கினி[illegible]சிவனுணர்ந்தக்ஷணமே பார்வதி[illegible]திலேறி அந்தரத்தியானமாகவந்து இந்த[illegible]பிள்ளையினதுகண்முன் பிரசன்னமானார் பிராமணப்பிள்ளை கண்விழித்துப்பார்த்து ஆனந்தக்கூத்தாடிப் பலவாறு துதித்தான் பரமசிவன் மகிழ்ந்து உன்தவத்துக்கு மகிழ்ந்தனன் உனக்கு வேண்டிய வரத்தைக்கேள் தருகிறோமென்றனர் பிராமணப்பிள்ளை மகிழ்ந்து ஓ சுவாமி சகலபாக்கியமுந் தாங்கள் தரிசனமானவுடன்பெற்றேன் என் கருத்திலொன்றிருக்கிறது அதென்னவெனில் அன்னதானப்பலனையறிவதுதான் அதனைத் திருவுள்ளம்பற்றவேண்டுமென்று வினவ? பரமசிவன் களிப்பு

ற்று ஓ பிராமணா அன்னதானப்பலனறியவேண்டிய கருத்து னக்குள் இருக்கிறமையால் விலாடதேசமென்றொரு தேசமுண்டுஅந்தத்தேசத்துக் கதிபதியாகியஅரசனுக்குப் புத்திரனில்லை அவன் வேதியனைப்பாதுகாத்து அவர்களுக்குத் தினம்பூசைசெய்து அவர்களாலட்சதையுந் திருநீறுந் தன்மனைவிக்குக்கொடுப்பித்துவருகிறான் அவ்வேதியர்கொடுக்கிறஅட்சதையானு நீறாலும் புத்திரனுண்டாகமாட்டான் இந்தஅட்சதையுந்திருநீறையுங் கொண்டுபோய்க்கொடு இவற்றால் புத்திரனுண்டாகுவன்புத்திரனுற்பத்தியாகும்போது நீஅங்கிருந்து ஒருபொற்றட்டில் ஈனுதவாழைக்குருத்தை அந்தத்தட்டில்வைத்து அப்புத்திரனை பூமியிற்படாமல் அதிலேந்தி அன்னதானப்பலனைக்கேள் அச்சிசு உனக்குச் சொல்லுமென்று கூறினர் பின்னும் வேதியன் வணங்கி ஓ சுவாமி நான் வரும் வழியில் ஒரு வேதியனிருக்கிறான் அவன் கனத்த சமுசாரியாகவிருந்தும் ஒரு ஏரி தினந்தோறு மடைஉடைத்துக் கொண்டுபோவதால் கனவருத்தப்படுகிறான் ஏரி உடைகிற காரணம் ஒருமுடவன் கைகாலில்லாமற் பசியாற் காட்டிற் தவித்துக்கொண்டிருக்கிறான் அவனுக்கு அவ்வளவு வருத்தம்வந்ததற்குக் காரணமும், ஒரு நாகங் கண்தெரியா திருப்பதோடு இரையின்மேலும் விருப்பமில்லாமலும் இருப்பிடத்தைவிட் டசையாமலு மிருக்கின்றது அதின் வரலாறும் ஒரு மாமரம் குலுங்கப்பழுத்தும் பிறருக்குப் பயன்படாமலிருக்கின்றதுஅந்தக்காரணமுங்விளங்கவுரைக்கவேண்டுமென்று வினவ? பரமசிவன் சொல்லுகிறார் ஓ பிராமணா பிராமணன் ஏரியினால் கனவருத்தப்படுவதற்குக் காரணம் அவன் வீட்டி லிரண்டு பெண்கள் பருவகாலமடைந்திருந்தும் அவர்க்ளுக்கு மணம்புரிவிக்காமலிருக்கின்றமையால் அந்தயேரி

உடைந்து வருத்தத்தைக் கொடுக்கிறது முடவன் தான் கற்றகல்வியை கலக்கமில்லாமற் சொல்லாமையால் அவனுக்கு அவ்வருத்தமுண்டாயிற்று நாகத்துக்கு தலையில் மாணிக்கமிருக்கின்றமையால் அந்நாகத்துக்கு அவ்வருத்தமிருக்கிறது மாமரத்தடியில் யேழுசாடி தனமிருக்கின்றமையால் அதனை பூதங்கள் காத்திருக்கின்றது அப்பூதத்தருகில் ஒருசெந்திவும்வாராதென்றுகூறி பின்னுஞ் சொல்லுகிறார் பிராமணன் கன்னிகைகளை மணம்புரிவித்தால் ஏரி உடையாது. முடவன் தான் கற்றவித்தையை ஒளியாமல் ஒருவர்க்குச் சொல்வானாகில் அவனுக்கு வருத்தம் நீங்கும். பாம்பு மாணிக்கத்தை யாருக்காவது கொடுத்துவிட்டால் அதன்வருத்தம் நீங்கும். மாமரந்தன்னிடத்திலிருக்கிற ஏழுசாடி திரவியத்தை யாருக்காவது கொடுத்துவிடுமோகில் அம் மரக்கனி பிறருக் குபயோகமாகுமென்று கூறினர். பிராமணப்பிள்ளை வணங்கி ஓ சுவாமி அடியேன் வருகிறபோது ஒருவேடன் எனக்கு பொசிப்புக்கொடுத்தா னவன்மிருகத்துக் கிரையாயினன் அவ்வரலாறுகூறவேண்டுமென்று வினவ? பகவான்சொல்லுகிறார் அப்பா பிராமணா அந்த வேடன் வரலாறு விலாடதேசத் தாசனுக்குப் பிறக்கிற பிள்ளையால் விளங்குமென்று விடைகொடுத்து அந்தர்த்தியானமாயினர். பிராமணன் தவநிலைவிட்டெழுந்து மாமரத்தடியில் வந்து ஓ மாமரமே உன்னிடத்தில் ஏழுசாடி பொன்னிருக்கிறதென்றும் அதனைப் பிறருக்குக் கொடுத்துவிட்டால் உன்கனி பிறருக்குபயோகப்படுமெனப்பரமன் திருவுளம்பற்றினரென்றுசொல்ல மாமரங்கேட்டு ஓ பிராமணா என்னிடத்திலிருக்கிற திரவியத்தை பாமனுற்கண்டு தெளிந்தமையால் உமக்கே அத்திரவியத்தைக் கொடுத்துவிட்டேன் நீரெடுத்துக்கொள்ளுமென்றுசொல்லப்

பிராமணன் நீர் கொடுத்தது நான் மறுபடியும் வந்தெடுத்துக்கொண்டு போகிறபரியந்த முன்னிடத்திலிருக்கட்டுமென்று சொல்லி விடைபெற்று நாகத்தினிடத்தில்வந்து ஓ நாகமே உன்தலையில் மாணிக்கமிருக்கிறதென்றும் அதனால் உனக்கு வருத்தம்நேரிட்டதென்றும் அதனை யாருக்காவது அதிகப்பிரியத்தோடு கொடுத்துவிட்டால் உன் வருத்தம் நீங்குமெனப் பரமன் சொல்லினரென்றுசொல்ல நாகம்சொல்லுகின்றது என்தலையிலிருக்கிற நாகரத்தினத்தை பரமனறிந்துவந்தமையால் நீரே அந்த ரத்தினத்தைவாங்கிக்கொண்டுபோமென அந்நாகம் மாணிக்கத்தைக்கக்கித்தன் வருத்தத்தை நீக்கிற்று பிராமணன் மாணிக்கத்தை வாங்கிக்கொண்டு மூடவனிடத்துவந்து ஓ ஐயா, நீ கற்றகல்வியை பிறருக்குரைக்காமல் ஒளித்தீரா மதனாலுமக்கு வருத்தமுண்டாயிருக்கிறதெனப் பரமன் திருவுளம்பற்றினரென்று சொல்ல மூடவன் என் உள்ளக்கருத்தை பரமனறிந்து சொன்னமையா லுமக்கே கற்பிக்கிறேன் வாருமென்று அழைத்துத் தான் கற்றவித்தையெல்லாங் கற்பித்து பஞ்சாட்சரத்தையும் நாவிலெழுதி தன் வருத்தத்தை நீக்கினன் பிராமணப்பிள்ளை வேதியன் வீட்டுக்குச்சென்று வேதியரைநோக்கி ஓ ஐயா, நீர் இரண்டுபெண்களுக்கு கலியாணஞ் செய்யாமல் இன்னும் வைத்திருக்கிரு மதனு லேரி உடைகிறது அக்கன்னிகைகளை ஆருக்காவது மணம்புரிவித்தால் ஏரி வுடையாது உமக்கும் வருத்தமில்லையென்று பரமன் திருவாய்மலர்ந்தருளினரென்று சொல்ல வேதியன் மகிழ்ந் தக்ஷணமே தன் குமாரத்திகளை அப்பிராமணப்பிள்ளைக்கு விவாகஞ்செய்வித்தான் பிராமணப்பிள்ளை பெண்ணைக் கலியாணஞ்செய்து சிலநாளிருந்து ஒருநாள் மாமனரை

நோக்கி ஓ ஐயா, இந்தப்பெண்களை மறுபடியும்வந்து அழை
த்துப்போகிறேனென்று சொல்லி விடைபெற்று விலாடதே
சம்வந்து அரசனைக்கண்டு ஓ மஹாராசனே என்கையினலட்
சதையும் நீறுங்கொடுப்பேனாகில் உனக்குப் புத்திரனுண்
டாகிறு னப்படிப் புத்திரனுண்டாகாமற்போனு லென் பிரா
மண்ணியத்தை விட்டுவிடுகிறேனென்று சபதங்கூறி அவ்வரச
னுத்திரவுபெற்று ராசபத்தினியை ஸ்நானஞ்செய்து ஈரவஸ்
திரத்தோடுவரும்படிசெய்து அட்சதையுந் திருநீறுங்கொடுத்
தான் இராசபத்தினி அதனையுட்கொண்டாள் உடனே கற்ப
முண்டாயிற்று இராசன் மகிழ்ந்து பிராமணப்பிள்ளைக்கு
உபகாரஞ்செய்தான் இராசபத்தினிக்குப் பிரசவகாலமாயி
ற்றுஅக்காலத்தில் வேதியன் அரசனைநோக்கி ஓமகாராசனே
உனக்குப் பிறக்கிற புத்திரன் மகாமண்டலேஸ்வரனாக யிரு
ப்பான் அவனோடு சிலவசனம் நான் வசனிக்கவேண்டியதாயி
ருக்கிறது ஆகையால் அப்புத்திரனைப் பூமியிற்படாமலிருக்க
ஒருபொற்றட்டுச்செய்து அதில் வாழைக்குருத்தை வைத்து
அதில் புத்திரனை யெடுத்து வரவேண்டுமென்று சொல்ல அர
சனக்கருத்துக்கிசைந்து தட்டும் வாழைக்குருத்துஞ் சேக
ரஞ்செய்து பிரசவகாலத்தில் புத்திரனை தட்டிலேந்திவரக்
கட்டளையிட்டு இராசராசாக்கள் வரும்படி திருமுக மனுப்பி
னன் இராசராசாக்கள் திருமுகங்கண்டு வந்து சேர்ந்தார்
கள் மருத்துவச்சிகள் புத்திரனை பூமியிற்படாமற் பொற்றட்
டிலேந்தி ராசசமுகத்திற் கொண்டுவந்தார்கள் பிராமணப்
பிள்ளை அப்புத்திரனைநோக்கி அப்பாராசபுத்திராஅன்னதான
ப்பலனைச் சொல்லவேண்டுமென்றுவினவ? அச்சிசு வாயைத்
திறந்து ஓ ஐயா, அன்னதானத்தின்பலனை என்னலுரைக்க
தக்கதல்ல ஆயினு மநுபவமொன்று சொல்லுகின்றேன் முன்

னம் நான் வேடன் உனக்கு ஒருநாள் ராத்திரி என்பங்கு தேனிலும் தினைமாவிலுங் கிஞ்சிற்றுனக்குக் கொடுத்தேன் அதனுல் வேடரூபம்நீங்கி உலகாதிபதியானே னென்றுன் அன்னதானத்தின்பலன் நீரே மதித்துக்கொள்ளும் என்ம னைவி யுமக்கு இடமுந் தேனுந் தினைமாவுங் கொடுக்கேனெ ன்றுளே அவளிந்தவூர்ப்பறச்சேரியில் வெட்டியான்வீட்டிலிரு க்கும் பன்றிபோட்டகுட்டிகளில் நாலாவதுகுட்டியாகவிருக் கிறு ளதற்கடையாளம் நாலுகால் வெள்ளை நடுநெற்றிசுக்க னிருக்கும் பார்த்துக்கொள்ளுமென்று கூறி வாயை மூடிக் கொண்டது. விலாடதேசத்தரசனும் மற்ற அரசர்களுங் கே ட்டுஆச்சரியப்பட்டுப்பிராமணப்பிள்ளையை யாவரும்வணங்கி இந்தவரலாறென்னவென்று வினவ? பிராமணப்பிள்ளை ஆ தியோடந்தமாக வரலாற்றைச்சொல்லினன் அரசன்மகிழ்ந் து அந்தப்பிராமணப்பிள்ளையைப் பூஜிதைப்படுத்தி வேண்டி யவற்றை யுதவி விடைகொடுத்தனன். அப்பிராமணப்பிள்ளை அரசனுக்கு ஆசீர்வதித்து மாமரத்தருகில்வந்து திரவியத் தை யெடுத்துக்கொண்டு வேதியரிடத்தில்வந்து இரண்டு மனைவியையு மழைத்துக்கொண்டு தன் தாயிடத்து வந்து வணங்கிப்போய்வந்த சேதியெல்லாம் விளங்கவுரைத்துத்தா யுந்தாலுந் தன்மனைவிகளும் சுகித்திருந்தார்கள். இவ்வகைப் பட்ட் புருஷனல்லவோ உங்களை மணம்புரிய வேண்டுமென் றுகூறிக் கதையை முடித்தனன் சூரியனுதயமானுன் மந் திரிகுமாரன் தன்மனையைச் சேர்ந்தான் இராசகுமாரத்தி அந்தப்புறஞ்சென்றுள்.

ஆகையால் இவ்வன்னதானப்பலனை அதிமதியூகிகளாகி யபுண்ணியபுருடாள் அறியவேண்டியது.

பிராமணப்பிள்ளை அன்னதானப்பலனை யறிந்தகதை

முற்றிற்று.

## சிவனடியார்களுக்கு அமுதளித்ததற்குப் பிரமாணம்.

### பேரியபுராணம்.

கொண்டுவந்துமனைப்புகுந்து குலாவுபாதம்விளக்கியே, மண்டுகாதலினுதனத்திடை வைத்தருச்சனைசெய்தபி, னுண்டினாலுவிதத்திலாறு சுவைத்திறத்தினிலொப்பிலா, வண்டர்நாயகர்தொண்டரிச்சையி லமுதுசெய்யவளித்துளார்.

மண்ணினிற்பிறந்தார்பெறும்பயன்மதிசூடு
மண்ணலாரடியார் தமையமுதுசெய்வித்தல்
கண்ணினாலவர்நல்விழாப்பொலிவுகண்டார்த
லுண்மையாமெனினுலகர்முன்வருகெனவுரைப்பார்.

அல்லார்கண்டத்தண்டபிரா னருளாற்பெற்றபடிக்காசு, பல்லாறியன்றவளம்பெருகப் பரமனடியாரானார்க, ளெல்லாமெய்தியுண்கவென விரண்டுபொழுதும் பறைநிகழ்த்திச், சொல்லாற்சாற்றிச்சோறிட்டார் துயர்கூர்வறுமைதொலைத்திட்டார்.

### தேவாரம்.

மட்டிட்டபுன்னையங்கானன்மடமயிலைக்
கட்டிட்டங்கொண்டான்கபாலீச்சரமமர்ந்தா
னொட்டிட்டபண்பினுருத்திரபல்கணத்தார்க்
கட்டிட்டல்காணுதேபோதியோபூம்பாவாய்.

### தாயுமானசுவாமிகள்பாடல்.

மறமலியுலகவாழ்க்கையேவேண்டும்வந்துநின்னன்பர்தம்பணியா, மறமதுகிடைக்கினன்றியானந்தவற்புதநிஷ்டையினிமித்தந், திறவதுவேண்டுமௌனியாயெனக்குத்தூயநல்லருடரினின்னம், பிறவியும்வேண்டும்யானெனதிறக்கப்பெற்றவர்பெற்றிடும்பேறே.

சோணசைலமாலை.

வெண்டிரு நீறுபுனையுமா தவர்க்கு விருந்துசெய் திறும்பெரு மிடியுங், கொண்டநல் விரதத் தினைக்கும்யாக் கையுமிக்கொடியனேற் கருளுநா ளுளதோ, வண்டுழுங் குவளைமலர்த்தடஞ் சுனையின் மற்றைவா னவர்க்குறித் தன்றித், தண்டியுண்மகிழ்ந்து கொளமலர்சோணசைலனே கைலைநாயகனே.

பட்டணத்தடிகள்பாடல்.

பருத்திப்பொதியினைப்போலேவயிறுபருக்கத்தங்க
டுருத்திக்கறுசுவைபோடுகின்றூர்துறந்தோர்தமக்கு
வருத்தியமுதிடமாட்டாரவரையிம்மானிலத்தி
லிருத்திக்கொண்டேனிருந்தாயிறைவாகச்சியேகம்பனே.

ஞானிகளுக்கு அற்ப அமுதளித்தாலும் பெரும்பலன்
என்றதற்கு பிரமாணம்.

துறுந்திரட்டு.

படித்தமறையோர்கள்பலகோடிபலகால
மிடித்தல்கெடவைத்தவர்கள்வேதமுடிவோதி
முடித்தபாமுத்தியுணர்வுற்றமுனிவன்கைப்
பிடித்தொருகையிட்டவர்கள்பெற்றதுபெருமோ.

வையமாமணியாதியாகவழங்கினூர்மகமேறினூர்
துய்யமாநதியாடினூர்அணியார்தவங்கள்தொகுத்துளார்
மெய்யமாதிகளெட்டுமேவியமெய்யுணர்ந்தவர்கையிலே
யையமாத்திரையிட்டவர்க்குளதானபேறடையார்களே.

திருமந்திரம்.

படமாடுங் கோயிற் பரமற் கொன் றீயி
னடமாடுங் கோயி னம்பற்கங் காகா

நடமாடுங் கோயி னம்பற் கொன் றீயிற்
படமாடுங் கோயிற் பரமற்கங்காமே.

அகர மாயிர மந்தணர்க் கீயிலென்
சிகர மாயிரஞ் செய்து முடிக்கிலென்
பகரு ஞானி பகலூண் பலத்துக்கு
நிகரிலை யென்பது நிச்சயந் தானே.

ஆறிடும் வேள்வி யருமறை நூலவர்
கூறிடு மந்தணர் கோடிபே ருண்பதி
னீறிடுந் தொண்டர் நினைவின் பயனிலை
பேறெனி லோர்பிடி பேறது வாகுமே.

## சிவபுண்ணியத்தெளிவு.

விச்சைநான்மறை வேதியர்கோடிபேர்க்
கிச்சையோடன்ன மீபலம்யாவையு
நிச்சயம்மொரு நீள்சிவயோகிகைப்
பிச்சையிட்ட பெரும்பயனல்குமால்.

மறைவலோரிலக்கம்பெயர்மாந்தவே
நிறையினலருத்தும்பலநேருமா
லுறையுஞ்சாதகயோகியொருவனுக்
கறையுநான்முறையன்னமருத்தவே.

கூற்றைவென்றகுழகனடியனைப்
போற்றியன்னம்பொலிவுறவூட்டினோ
ராற்றுமோர்கற்பமாயிரகோடிமேல்
வீற்றிருப்பருருத்திரன்மெய்ப்பதி.

## சிவதருமோத்திரம்.

பொன்னை மணியைப் புனையிழையை மற்றும் விரும்பும்
பொருளினையு, மன்ன மளிப்பா ரீங்கடைவ ரங்குந்தாம்வே

ண்டியவடைவ, ரன்ன மதனை யருந்தவரை யருத்தி ஞர்க ள
வர்பலத்திற், றுன்னு வார்க ளொருபாதி யவர்தா மொருபா
ற் றுன்னுவரே.

### புலியூர்வெண்பா.

அள்ளியவா யன்ன மருந்தவர்வாய் வீழ்த்தகொடிப்
புள்ளருள் பெற் றுய்யும் புலியூரே—யுள்ளமதி
சோதிக்கவருவார் தொண்டாவோடுன்வசமென்
ரோதிக்கவருவாரூர்.

ஞானிகள் ஒருவற்கு அமுதளித்தால் உலகனைத்துக்கு
மளித்ததாகு மென்றதற்கு பிரமாணம்.

### குறுந்திரட்டு.

மலகடாதியில்வைத்தமனத்தினை
விலகிமெய்மையுணர்ந்திடும்வித்தக
ரிலகும்யாவரும்யாவையுமாதலா
லுலகெலாமுண்டதாமிவனுண்டதே.

### பிரபுலிங்கலீலை.

உலகிலொருவன்சிவயோகியுண்டதம்மசராசரமா
மலகிலுயிர்களெலாமுண்டதாகுமென்னம்மறைகூறு
மிலகுமுறையைக்காட்சியானின்றிங்குணரவுணர்த்தினன்
கலகவினைகடீர்க்குமருட்கண்ணன்றிகழல்லமதேவன்.

### திருமந்திரம்.

தண்டறு சிந்தை தபோதனர் தாமகிழ்ந்
திண்டதி மூன்று புவனமு முண்டது
கொண்டது மூன்று புவனமுங் கொண்டதென்
றெண்டிசை நந்தி யெடுத்துரைத் தானே.

## சிவனடியார் பெருமைக்குப் பிரமாணம்.

### திருவிளையாடற்புராணம்.

சிவனடியார்க்கன்பிலாச்சிந்தையேயிரும்பேவல்செய்தி நாளு, மவனடியார்திறத்தொழுகா வாக்கையேமரஞ்செவிகண்ணுதியைந்திம், பவனடியாரிடைச்செலுத்தாப்படிவமேபாவைமறைபரவுஞ்சைவ, தவநெறியல்லாநெறியே பவநெறியென்றளியளாய்த்தளர்வாள்பின்னும்.

எனைத்துயிர்க்குமுறுதி யிகபரமென்பவவை கொடுப்பானெல்லாந்தானு, யனைத்துயிர்க்குமுயிராகு மரனென்ப வவனறிவார்க் கங்கம்வாக்கு, மனத்துறுமெய்ப்பத்திவழிவருமென்ப வப்பத்திவழி நிற்பார்க்கு, வினைத்துயர்தீர்த்திடவெடுத்த வடிவென்ப தவனடியார் வேடமன்றோ.

## சிவஞானிகள் பெருமைக்குப் பிரமாணம்

### குறுந்திரட்டு.

பலன்கள்வேண்டியபரிசெலாம்பலித்திடும் பரமதத்துவஞானி, நலங்கொளுமமாமந்திரஞ்செபித்திடநயந்தவனீராடுஞ், சலங்கடீர்த்தமாமவன் றிருமேனியேசகலதெய்வமுஞ்செவ்வாய், மலர்ந்தவாசக மறுபிறப்பென வருமயற்பிணிமருந்தாகும்.

யாவனிங்குமெய்யுணர்ந்தவனிவனையேயிமையப்
பாவைதன்னையோர்பாகம்வைத்தவன்பரவுவதும்
நாவின்மங்கையைநயந்தவனவில்வதுமவனைப்
பூவின்மங்கையைப்புணர்ந்தவன்புகழ்வதுமவனை.



பண்டைநான்மறைபகருதற்கரியவன்பரந்த
வண்டநாடருமனந்தகோடிகளுமாரமுதா
யுண்டநாயகனுருவுதன்னுளத்துளேயடக்கிக்
கொண்டஞானிதன்பெருமையைக்கூறுவாரெவரே.

### ஞானவாசிட்டம்.

போற்றவணங்கப்பூசிக்கப்புகழ வருந்திப்போய்க்காண, வாற்றவுரியோனெவனவன்வன் பிறவியறுப்போர்க்கன

வரதஞ், சாற்றுமகத்தாற்றீர்த்தத்தாற்றவத்தாற்றானத்தாற்கிட்டா, வூற்றவறிவாற்பிறவியறுத்துயர்ந்தோன் பத்திதரும்பயனே.

### சூதசங்கீதை.

எவன்மனையிடத்தி லினையின்மெய்ஞ்ஞானி யிறைப்பொழுதேனும்வந்திறினு, மவன்குலமனைத்தும்பரகதிதனையின்றடைந்தனமென்று கூத்தாடுந், தவமுளோயான்மதத்துவாநுபவிதன்னேக்கினுற்றீவினைதணியுஞ்,சிவசொரூபத்தோன்றெரிசனந்தானேதெளிந்தமெய்ஞ்ஞானிசித்தியதாம்.

### பிரமகீதை.

ஈசனுஞானியிருந்துளவிடத்தேயிருப்பதுமுத்திதானந்தத், தேசிகனேவல்செய்பவன்காலென்சென்னியிலிருப்பது மன்னி, மாசிலாப்பரமஞானியாமுனிக்குமகேசனுமொப்பலன்மதிக்கி, லாசிலாவரியுமொப்பலனுனு மொப்பலனேவரொப்பாரே.

### ஞானிகளேவற்சிறப்புக்குப் பிரமாணம்.

### குறுந்திரட்டு.

ஆவதாவதிலதற்றவன்னர்தம்
பாவம்யாருமறியப்படாதவர்க்
கேவல்செய்துதிரிவார்களெய்துவார்
மூவர்தேவர்மொழிந்தருண்முத்தியே.

ஞாலமுண்டவன் றலையினுற்சுமப்பன் மெய்ஞ்ஞானிவேண்டியதென்று, னலமுண்டவனவன்பினேதிரிகுவ னவன்பதப்பொடிக்கென்றுன், சீலமொன்றையுந் தெரிவருஞானிதன் சேவடிபணிசெய்வான், காலிரண்டும்மென் றலையவேயென்றனன்கமலநான்முகத்தோனும்.

ஞானிகள் சிவசொரூபமென்பதற்குப் பிரமாணம்.

விவேகசூடாமணி.

யாதொருபிரமஞானியிலக்கியாலக்கியங்க
ளேதமேவிட்டகற்றியேககேவலனாய்நிற்பன்
சாதுவாமவனேநித்தசச்சிதானந்தமாக
வோதியசிவசொரூபனுண்மையீதுண்மையீதே.

சொரூபவுந்தியார்.

மெய்ம்மைமெய்யென்று விரித்தறிஞானிக்குச்
செய்யகருமமே துந்தீபற
சீவன்சிவமென்றே யுந்தீபற.

ஞானிகளொன்றைச்செய்துஞ் செய்யாதோனாயு மொன்றைப்புசித்து மொன்றைப்புசியாதோனாயு மோருடம்போடிருந்து மோருடம்பிலானாயு மோரளவுபட்டு மோரளவுபடாப்பூரணனாயு மிருப்பனென்றதற்குப் பிரமாணம்.

விவேகசூடாமணி.

ஒன்றினைச்செய்யும்போதுமொன்றுமேசெய்கையற்றோ
னொன்றினைத்துய்க்கும்போதுமொன்றுமேதுயித்தலற்றோ
னொன்றியசரீரியேனுமோர்சரீரமுமேயற்றோ
னன்றியுமளவுபட்டோனாகினும்பூரணன்றான்.

ஞானிகளைப் பிரியாப்பிரியஞ் சுகதுக்கந்தொடாதென்றதற்குப்பிரமாணம்.

விவேகசூடாமணி.

உரைதரும்விதமேயாகவோர்சரீரமுமேயின்றி
யொருமையாயிலங்காநின்றவோங்கியபிரமவித்தைப்

பிரியமப்பிரியமற்றும்பேசியசுபாசுபங்கள்
மருவியேதொடராதொன்றுமைந்தனேமற்றுங்கேளாய்.

## ஞானவாசிட்டம்.

பாவனைநீர்த்திரியமதினிளைப்புநீங்கிப்பவமென்னுங்கடல் கடந்துபாரஞ்சேர்ந்தோன், சீவனெனநின்றாலுஞ்சீவத்தன்மைதீர்ந்தாலுமில்லறத்திற்செறிவுற்றாலும்,கேவலஞ்சந்நியாசியாயிருந்தபோதங்கிளர்சுருதிமயக்கத்தாற்கிடைப்பட்டாலு, மியாவதுஞ்செய்துந்தவிர்ந்தும்பயனென்றில்லை யிமகிரியுருக்கடல்போலியல்பினிற்பன்.

ஞானிகள்பிராரத்தமெவ்வா றவ்வாறு வேண்டிய வண்ணமிருப்பார்க ளென்றதற்குப்பிரமாணம்.

## வேதாந்தசூடாமணி.

உலகிறந்தசீவன்முத்தனுகர்வினைவாசனையா
லுண்பொருள்கள்பலகவர்ந்துமௌனமேயுற்றும்
பலதிறங்கண்மொழிந்துமுபதேசநெறிபுரிந்தும்
பரதவித்துமகிழ்ந்துமிகுவேடங்கள்புனைந்துங்
கலைதிறந்துமுடையுடுத்துங்கல்விபலபயின்றுங்
கல்லாதுமாதர்முயக்கிடையுற்றுமிவ்வா
றலகிறந்தநடையுறினுமருள்விளையாட்டென்றே
யவன்றனைநம்புகவையமொருசிறிதுமுருமல்.

## அஞ்ஞவதைப்பரணி

தெளியுமுளத்தார் சிலவர்தெளிப்பார்
சிலவர்களிப்பார் சிலவர்திகைப்பா
ரளியுமுளத்தோ டழுதசிரிப்பா
ரவர்கள்செயற்பா டறியவோணுதே.

விண்டிருந்தென்மெய் கண்டுளோர்தவ
வேடமேவியென்கோடிமாதரைக்
கொண்டிருந்தெனவர்செய்ததேதவங்
கொண்டகொண்டதேகோலமாகுமால்.

அவிரோதவுந்தியார்.

ஆனந்தமெய்திஞே ராடினும்பாடினு
மானந்தலீலையென் றுந்தீபற
அவர்செயல்கூறெணு துந்தீபற.

ஞானவாசிட்டம்.

வருதொழலின் விருப்புறுன்வத்தமான வழிநிற்பன்சென்றவற்றைமனத்தினெண்ணுன், கருமமுழுவதுமியற்றுந் தொடர்பந்தத்திற்கலந்தவர்பான்மனம்பற்றுன் கவலைகூரான், மருவியவோர்பத்தர்பாற்பத்தனுகும்வஞ்சகர்பால்வஞ்சகனும்வாலர்தம்பாற், பருவமுறுவாலனும்விருத்தரானோர்பால்விருத்தனுந்தீரர்பாலுமாங்கே.

அன்றியும்-விடலைபால் விடலையாந்துயருற்ருேர்பால் வெந்துயரமுறுநிலைமை விடாதபுந்தி,

சோருபசாரம்.

எந்தெந்தப்போக மெதிராகுமவ்வளவ்க்
கந்தந்தப்போக மனுசரிப்பார் - பந்தமற்று
நீதித்தனிநிலையே நிற்பர்நிரணம்பரவு
மாதித்தன் போலே யவர்.

பகவற்கீதை.

இப்படியுயிரையுமியாக்கைதன்னையு
மெய்ப்படவறிந்தவன்வேட்டவேறுகர்ந்
தொப்பரவன்றியேயொழுகிவாழினும்
பொய்ப்படுபிறவியின்மறித்தும்போகலான்.

பஞ்சதசப்பிரகரணம்.

யாதொருக்கால் இருதயத்திலிருக்கிற ஆசையெல்லாம் பற்றறவிட்டுப்போயிற் றன்றைக்கிவன் முத்தனென்றுவே

தஞ்சொல்லுகிறது ஞானிகளிடத்திற் காணேமென்கிற சங்கைக்கு,

அகங்காரத்தையும் ஆத்மாவையும் ஒன்ருகக் கண்டு வருகிற ஆசையாகாதென்று அந்த வேதத்திற் கர்த்தம் அகங்காரக்கிரந்திவிட்டு ஆத்மாவை வேறுகண் டிருக்கிறவனுக்கு அகங்காரத்திலிடமாய்க் கோடியாசை வந்தாலும் ஆனியில்லையென் றுத்தரம்.

இப்படிப் பரியாசம்பண்ணத் தேவையில்லை சடபரதர் முதலானபே ருபேக்ஷையாயிருந்தது புராணத்திற் கேட்டோமென்கிற சங்கைக்கு,

ஸ்திரீகள் வாகனங்க ளோடே கூடி விளையாடினுலும் ஞானி சரீரத்தைத் தானென்றெண்ணுனென்று சாமவேதஞ் சொல்லுகிறதென் றுத்தரம்.

இப்படி யறிந்த விவேகி பிராரத்தத்தோற்றவை யெப்படிக் காண்ப னென்கிற சங்கைக்கு,

சாஸ்திர மறியாதவன் கலங்குகின்ருற்போலக் கலங்காமல் மாயையாகிற மேகம் பிரபஞ்சமாகிற மழையை வேண்டியபடி பெய்தாலுஞ் சிதாகாசமா யிருக்கிற நமக் கானியேது லாபமேதென்று கவலைகெட் டிருப்ப னென்றுத்தரம்.

ஞானிகள் பிராரத்தவசத்தால் வேண்டியவா றிருப்பதைக்
கண்டிகழ்ந்தோர் நரகமுதலிய துன்பங்களை
யநுபவிப்பார்களென்றதற்குப் பிரமாணம்.

திருந்திரட்டு.

என்றுமுள்ளவறிவுமெய்யின்பமா
மொன்றுமின்றியுணர்வதிலார்தமை
நன்றுதீங்குணர்நாட்டமிலாதவ
ரென்றுஞானமிலார்க்கழ்கிற்பரே.

முன்னையிறந்தமுதற்றனிவித்தா
முன்னையிறந்தளவொன்றையுணர்ந்தோன்
றன்னையிகழ்ந்தவர்சங்கையறத்தா
மென்னையிகழ்ந்தனரென்றனனீசன்.

கண்டகடவுளக்கடவுளெனக்காணுதே
பண்டைநிலைநினைவார்பாதகரேயானக்கா
லண்டமுழுதிமகத்துணர்ந்தவற்புதரைப்
பண்டைநிலையைநினைந்திகழ்வார்பாவிகளே.

செய்யவினையிற்சிறிதுதப்புமவர்சேர்வார்
வெய்யநரகென்னுமறைமெய்யினையுணர்ந்தார்
செய்யுமதுவேதவமெனத்தெளிவுருதே
வெய்யவுரைசெய்துசிலர்வெந்நரகில்வீழ்வார்.

நயம்பெருகுவீடுதவுஞானியையிகழ்ந்தே
யியம்புமதிகேடனெரிவாய்நிரையமெய்தி
வயங்குகதிரோனுமொளிர்மாமதியும்வான்மே
லியங்குவர்களெவ்வளவுமவ்வளவுமேருர்.

எழில்ஞானியையிகழ்வானிகழ்கெட்டானிகழ்கெட்டுள்
ளழலாதவனிசையுற்றவனெனநால்வருமவரைக்
கழலாதுடனுறைவானிவர்கான்மேலுறவாருத்
தழலாகியநிரயத்திடைதலைகீழுறவீழ்வார்.

## சோநபசாரம்.

செம்மையறியார் செகத்தோற்றரவறியார்
தம்மையறியார்வினையுந் தாழ்வறியார்-தம்மிலே
யந்தரராய்வீணே யவமதிப்பார் நல்லோரை
யெந்தவழிபோவா ரிவர்.

பெற்றபேரின்பப் பெரியோர்சரித்திரத்தைக்
குற்றமெனநாடுங் கொடியோர்கள்-பற்றருக்
கோசகாரப்புழுப்போற் கோடானகோடிசென்ம
மாசார்வொன்றே மதி.

### மகாவாக்கியம்.

அப்படியாகினு மனல்போ லேதேனுமருந்துவொன்ற றைதல்வேண்டார்,தப்பறவேயஞ்ஞானி போற்புசிப்பனென வுரைத்த தகைமையாலே, யொப்புரைத்ததல்லாதிங் குலகி கழப்புசியான்மற் றுண்டானேனு, மெய்ப்பரிசையுணர்ந்தா ரையிகழ்ந்தார்க்கு நரகமென் றுவிளம்புவாரோ.

ஞானிகளைக்கண்டவுட னவர்களெவ்வாறிருப்பினுமவர் களுக்குத் தகுமென்றுன்னி யவர்களைத் தரிசித்துத் துதித் துபசரிப்போர்க ளிகத்திலும் பரத்திலுஞ் சுகமடைவார்க ளென்றதற்குப் பிரமாணம்.

### கைவல்யநவநீதம்.

சீவன்முத்தரைச்சேவித்தோர் சிவனயனெடுமாலான
மூவருமகிழநோன்பு முழுவதுஞ்செய்திசன்ம
பாவனமானுரொன்று பழமறைமுழங்குமிப்பால்
மேவருஞ்சீவன்முத்தர் விதேகமுத்தியுநீகேளாய்.

### சூதசங்கீதை.

இகழுஞ்சிற்சொருபத்தனு தினநடிக்குஞ்சிவத்தையோர் முகூர்த்தஞ்சிந்தித்தால், அகிலசாலங்களனைத்தையும்பிரம மாயுணர்ந்தசைவறுத்தமைந்தாற், புகழுமெய்ப்பிரமநிஷ்ட னையன்னம்புனலிவையுதவி பூசித்தாற், சகலபாதகமுந்தணி யுமெய்ஞ்ஞானத்தழலினுற்றணிவுருவுளவோ.

ஞானிகளகர்த்தாவாய்ப் பிராரத்தக்ஷய பரியந்தம் பூமி யிற் சரீரத்தோடு சஞ்ரிக்கும்போ தவர்களது முக்கரணத் தாலு முண்டான பாவ புண்ணியங்களைத் துதி நிந்தையாற் பங்கிட்டுக்கொள்ளப் பங்காளிக ளிருவருண்டென்பதற்குப் பிரமாணம்.

### கைவல்யநவநீதம்.

பொறுமையாற்பிராரத்தத்தைப் புசிக்குநாட்செய்யுங்கர்மம்
மறுமையிற்றொடர்ந்திடாமல் மாண்டுபோம்வழியேதென்று
சிறியவரிகழ்ந்திஞானிசெய்தபாவத்தைக்கொள்வார் [ல்
அறிவுளோரறிந்துபூசித் தறமெலாங்கைக்கொள்வாரே.

### இவ்விதத்தாற் பாவம்வரு மிவ்விதத்தாற்புண்ணியம் வரு மென் றுன்னிப் புண்ணியவழியாய்ச்செல்ல மனதிற்கு இதோபதேசப்பிரமாணம்.

### பிரபுலிங்கலீலை.

எய்தற்கரியயாக்கைதனக்கெய்திற்றென்றுலதுகொண்டு,செய்தற்கரியவறங்கள்பலசெய்துதுயர்கூர்பிறவியினின்,று ய்தற்கொருமைபெறவெண்ணு திழல்வோனுடம்புபொற்கல த்திற்,பெய்தற்குரியபால்கமரிற்பெய்ததொக்குமென்பரால்.

### பட்டணத்தடிகள்பாடல்.

நாட்டமென்றேயிருசற்குருபாதத்தைநம்புபொம்ம
லாட்டமென்றேயிருபொல்லாவுடலையடர்ந்தசந்தைக்
கூட்டமென்றேயிருசுற்றத்தைவாழ்வைக்குடங்கவிழ்நீ
ரோட்டமென்றேயிருநெஞ்சேயுனக்குபதேசமிதே.

ஆயாய்பலகலையாய்ந்திடுந்தூயவருந்தவர்பாற்
போயாகிலுமுண்மையைத்தெரிந்தாயில்லைபூதலத்தில்

வேயார்ந்ததோளியர்காமவிகாரத்தில்வீழ்ந்தழுந்திப்
பேயாய்விழிக்கின்றனைமனமேயென்னபித்தினக்கே.

சற்றாகினுந்தன்னைத்தானறியாய்தனையாய்ந்தவரை
யுற்றாகிலுமுரைக்கப்பொருந்தாயுனக்கானநிலை
பற்றாய்குருவைப்பணியாய்பரத்தையர்பாலிற்சென்றறன்
பெற்றாய்மடநெஞ்சமேயுனைப்போலில்லைப்பித்தனுமே.

மனையாளுமக்களும்வாழ்வுந்தனமுந்தன்வாயின்மட்டே
யினமானசுற்றம்மயானமட்டேவழிக்கேதுதுணை
தினையாமளவெள்ளளவாகினுமுன்புசெய்ததவந்
தனையாளவென்றும்பரலோகஞ்சித்திக்குஞ்சத்தியமே.

அத்தமும்வாழ்வுமகத்துமட்டேவிழியம்பொழுக
மெத்தியமாதரும்வீதிமட்டேவிம்மிவிம்மியிரு
கைத்தலமேல்வைத்தழுமைந்தருஞ்சுடுகாடுமட்டே
பற்றித்தொடருமிருவினைப்புண்ணியபாவமுமே.

சத்துவதானத்திற்குப்பரமாணம்.

பகவற்கீதை.

முன்செய்காரியப்பொருட்டுமின்றியேமுடித்திதனாற்
பின்பொருநற்பொருள்விளையுமென்பதுவும்பேணாதே
நன்குடையகாலத்தேநல்லிடத்தேநல்லவர்க்குத்
தன்பொருளைக்கொடுக்குமதுசாத்துவிததானமே.

தன்மமொன்று கோடியாய் விருத்தியாகுமென்றதற்குப்
பிரமாணம்.

நீதிசாரம்.

எடுத்திடில்விசயனம்பு யேகமாயெடுத்திடன்றை
தொடுத்திடிற்பத்துமாகில் விடுகிலத்தொண்ணூறாகு

மடுத்ததைவிட்டவாறே ஆயிரமாகிலெக்கிற்
றடுத்திடுங்கோடிபோலத் தவமுளோர்க்கீயுந்தானம்.

சாதிக்களாற் சகலமுஞ்சித்திக்குமென்றதற்குப்பிரமாணம்.

### ஞானவாசிட்டம்.

நாட்டினியல்புவழுவாமனட்டோக்கிதமாநற்பொருள்க
ளீட்டிமுன்னமதனாலேயினியகுணத்திலுயர்ந்தோரைக்
கூட்டியவராளிராசையினைக்கூடியதனால்விசாரத்தைத்
தீட்டியதனான்மெய்ஞ்ஞானந்தெளிந்தான்முத்திசித்திக்கும்.

### தேவாலயத்தினும் மடாலயம் விசேஷமா மென்றதற்குப் பிரமாணம்.

### சப்சீலமுனிவர்பாடல்.

திடம்பெற்றஞானிகள் சேர்கையினாற் பசிதீர்கையினால், உடம்புற்றவுண்மையுறுகையினாலுபதேசிக்கையினால், இடம்பெற்ற மங்கைபங்காளரடியரிருக்கையினால், மடம்பெற்றபேறுதிருக்கோயிலுக்கில்லைவையகத்தே.

இங்கே காட்டப்பட்ட பாடல்களால் அன்னதானமே சிறந்ததென்பதும், சிவனடியார்களுக்கும் பெரியோர்களுக்கும் அன்னதானஞ் செய்வதே விசேஷமென்பதும், சிவனடியார்கள் பெருமையும், சிவஞானிகள் பெருமையும், சிவஞானிகளேவற்சிறப்பும், சிவஞானிகள் சிவசொரூபமென்பதும், சிவஞானிகளியல்பும், சிவஞானிகளைப் பிரியாப்பிரியந் தொடராதென்பதும், சிவஞானிகள் பிராரத்தமெவ்வா றவ்வாறிருப்பார்களென்பதும், சிவஞானிகள் பிராரத்தவசத்தால் வேண்டியவாறிருப்பதைக்கண் டிகழ்ந்தோர் நரகமுதலிய துன்பங்களை யநுபவிப்பாரென்பதும், சிவஞானிகளகர்த்தா

வாய்ப் பிராரத்தக்ஷயபரியந்தம் பூமியிற் சரீரத்தோடு சஞ்சரிக்கும்போ தவர்களது முக்கூரணத்தாலுண்டானபாவபுண்ணியங்களைத் துதிநிந்தையாற் பங்கிட்டுக்கொள்ளப் பங்காளிகளிருவருண்டென்பதும், மனதிற்குரிய இதோபதேசமும், சத்துவதானமும், தவமூளோற்கீயுந் தன்ம மொன்று கோடியாகுமென்பதும், சாதுக்களாற் சகலமுஞ் சித்திக்குமென்பதும், தேவாலயத்திலும் மடாலயம் விசேஷமென்பதும், தெளிவாகவிளங்குவதால் விசேஷித்தெழுதவில்லை. இன்னும் விரித்தாற்பெருகும் சுபம். சுபம். சுபம்.

'அறஞ்செயவிரும்பு, ஈவதுகரவேல், பெரியோரைப் பேணு,' என்று - ஆத்திசூடியிலும்,

"அறக்குறைவைநிறைவாக்குஞ்சம்பத்தாக்கு
மாபத்தைச்சுபமாக்குமசுபந்தன்னைச்
சிறக்குமுயர்ந்தவர்கூட்டமென்னுங்கங்கைச்
சிதகிராடினர்க்குச்செந்திவேள்வி
யிறக்கரியதவந்தானந்தீர்த்தம்வேண்டா
மிடர்பந்தமறுத்தெவர்க்குமினியோராகிப்
பிறப்பெனும்வேலைப்புணையாமுணர்வுசான்ற
பெரியோரையெவ்வகையும்பேணல்வேண்டும்."

என்ற [illegible] த்தலா லிவ்விதம் யாவரு[illegible]